# ஆரூட பாவம்

559

ப்ரசின நாரதியத்தின்
மொழி பெயர்ப்பு





பிரசுரம்:
ஆனந்தபோதினி காரியாலயம்,
சௌகார்பேட்டை, சென்னை-1.

உ

ஸ்ரீரஸ்து:

# ஆரூட பாவம்

ப்ரசின நாரதீயத்தின்
மொழி பெயர்ப்பு.

776

இஃது நமது ஜோதிஷபாவத்ரய நிர்ணயத்தின் ஆசிரியர்
**ஸ்ரீமான் O. P. லக்ஷ்மீநரஸிம்மாசாரியர்**
அவர்களால்
மொழி பெயர்த்து எழுதப்பட்டது.

சென்னை:
"ஆனந்தபோதினி," பத்திராதிபர்
நா. முனிசாமி முதலியாரவர்களால்
வெளியிடப்பட்டது.

 *1949* [விலை அணா 4

# முன்னுரை

உலகில் ஜோதிஷ சாஸ்திரத்தில் எத்தனையோ பேதங்கள் இருக்கின்றன. அவற்றுள் இந்த ப்ரச்ன சாஸ்திரமும் ஒன்ருகும். ப்ரச்னைகள் பலதரப்பட்டிருப்பினும் அவற்றிற் கெல்லாம் பலனும் கூறப்பட்டிருக்கிறது. முக்ய மாக நமது நோக்க மென்னவெனில் இந்த ப்ரச்ன சாஸ்திர மானது மிகவும் மேன்மையான தாகவும் மிகவும் எளிதில் யாவரும் தெரிந்து கொள்ளக் கூடியதாயு மிருப்பதால் இதை ப்ரசின நாரதீயம் என்னும் கிரந்தத்தில் இருந்து தமிழில் மொழி பெயர்த்து வெளியிட எண்ணங் கொண்டு மொழி பெயர்த்து வெளியிடலானேம். இந்த நஷ்ட ப்ரச்னை என்பதைக் கொண்டே சகலத்தையும் கண்டறிந்து கொள்ளக் கூடும். இந்த ஆரூட சாஸ்திரமானது உடனேயே சீக்கிரமாக பலனைத் தெரிந்து கொள்வதற் கெனவே சொல்லப்பட் டிருக்கிறது. இதை உலகிற்கு உபகார மாக வெளியிடும்படி நமக்கு கொடுத்த நண்பர் ஆ. வேதாந்தாசாரியருக்கு நாம் என்றும் கடமைப் பட்டுள் ளோம். இந்த ப்ரசின சாஸ்திரமானது நக்ஷத்திரத்தைக் கொண்டே எதையும் கண்டறியும்படி சுலபமாகவும், சுருக்கமாகவும் அர்த்தபுஷ்டியுள்ள தாகவு மிருப்பதால் இதை அப்ய சித்து சகலரும் பயனடையும்படி வேண்டுகின்ருேம். தவிர இதில் பஞ்ச பக்ஷிகளைக் கொண்டு ப்ரசினைகளையும் இதரமானவற்றையும் தெரிந்து கொள்ளும்படி பக்ஷி சாஸ்திரமும் ப்ரச்ன சாஸ்திரமாகவே சொல்லப்பட்டிருக்கிறது. இந்த பக்ஷி சாஸ்திரமானது அகஸ்திய முனிவராலும், கர்க்க

முனிவராலும் சொல்லப்பட் டிருக்கிறது. இதிலுள்ள விசேஷங்களை விசேஷித்துக்கூற இதைப் படிக்கும் பாக்ய சாலிகளுக்கே விட்டுவிடப் படுகிறது. இதிலுள்ள குற்றங்களை மன்னித்து குணத்தைமட்டும் கிரகித்துக் கொள்ளும்படி சகலரையும் வெகு பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு

ஒ. ப. லக்ஷ்மீநரஸிம்மாசாரியர்.

உ

ஸ்ரீரஸ்து

# ஆரூட பாவம்

# நஷ்ட ப்ரச்னை

---

## நஷ்டப்பட்ட சோத்து இருக்கிற திசையை சந்திரனைக் கொண்டு காணும் வழி

அசுவினி முதலாக நக்ஷத்திரங்களை, ப்ரசின்ன கேட்கப் படுகிற அன்றைய அப்போதைய சமயத்தில் சந்திரனிருக்கிற நக்ஷத்திரம் வரை எண்ணிக்கொண்டு அத்துடன் நிறுத்திக் கொண்டு எட்டுக் கட்டம் வரும்படி ஒரு கட்டம் போட்டு கட்டம் ஒவ்வொன்றிலும் மூன்று நக்ஷத்திரம் வீதம் அசுவினி முதலாக அமைத்து வரும்போது சந்திரன இருக்கிற நக்ஷத்திரம எந்தத திக்கில் வருகிறதோ அந்த திக்கில நஷ்டமான சொத்து இருப்பதாக கொள்ளவேண்டும.

| | | |
|---|---|---|
| | | |
| | | |
| | | |

இந்த எட்டுக் கட்டங்களையும் எட்டு திக்குகளாகக் கொள்ள வேண்டும். கட்டத்தின (நடுமத தியில) கிழக்கில் இருந்து ஆரம்பம செய்ய வேண்டும.

இப்படிக் கண்டுகொண்ட பின்பு,

## நஷ்ட மடைந்த சோத்து கிடைக்குமா, பிடிக்கப்பட் டிருக்குமா, கண்ணிலாவது தென்படுமா, தென்படாதா என்பதைக் காணும் வழி

ப்ரசின்ன கேட்கப் டுகிற சமயத்தில் தற்போதைய திதி, வாரம், நக்ஷத்திரம், லக்னம் ஜாமம, திசகு ஆகிய இவைகளை தனித் தனியாக எண்ணி ஒன்றாக மொததமாக கூட்டின தொகையை எட்டினால் வகுத்து மீதம் வரும் எண் என்ன

வென்பதைக் கண்டு பிடித்த பிறகு மேற்படி எண் ஒன்று ஐந்து ஆகிய இரண்டில் எது வந்தாலும் இழக்கப்பட்ட சொத்து திரும்ப கிடைக்கும். இரண்டு, எட்டு ஆகிய இரண்டு எண்களில் எது மேலே சொன்னபடி வகுத்த மிச்சமாக வரினும் நஷ்டப்பட்ட சொத்து கண்ணில் தென்படாது. மூன்று ஏழு ஆகிய எண்கள் இரண்டில் எது எட்டினால் வகுத்த மிச்சமாக வரினும் நஷ்டப்பட்ட சொத்து பிடிக்கப்பட்டிருக்கும். மேற் கூறியபடி எட்டால் வகுத்துக் காணப்பட்ட மிச்ச எண்ணானது நானகு ஆறு ஆகிய இரண்டு எண்களில் எதுவாக மிச்சப்படினும் இழக்கப்பட்ட வஸ்து திரும்ப காணப்படும்.

### நக்ஷத்திரத்தைக் கொண்டு எந்த திக்கில் நஷ்டமான பொருள் இருக்கும் என்பதை காணும் வழி

கிருத்திகை, ரோகிணி மிருகசீரிஷம, திரு ஆதிரை, புனர் பூசம், பூசம், ஆயில்யம் ஆக ஏழு நக்ஷத்திரங்களில் எது பிரசின்ன கால நக்ஷத்ரமானாலும் நஷ்டமான சொதது கிழக்கு திககிலும், மகம், பூரம். உத்திரம், ஹஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம் ஆகிய இந்த ஏழு நக்ஷததிரங்களில் எது ப்ரசின கால நக்ஷத்ரமாக ஏற்படினும் இழககப்பட்ட பொருள் தென் திசையிலும்,

அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், அபிஜித, திருஓணம் ஆகிய இவ் வேழு நக்ஷத்திரங்களில் எந்த நக்ஷதரம் ப்ரசின காலத்திய நக்ஷத்திரமானாலும நஷ்ட மேற்பட்ட வஸ்து மேற்கிலும்,

அவிட்டம், சதையம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, அசுவனி, பரணி ஆக இந்த ஏழு நக்ஷத்திரங்களில் எது ப்ரசின்ன காலத்தில இருப்பினும் நஷ்ட திரவியமானது வடதிசையிலும் காணப்படும்.

### மேலும் மேற்படி நஷ்ட வஸ்து தன் ஊரிலேயே இருக்கிறதா? வெளியில் வேறு கிராமத்தில் இருக்கிறதா? அல்லது சமீபத்தில் இல்லாமல் தூரத்தில் இருக்கிறதா, சமீபத்தில் காணப்படுமா, காணப்படாமல் தூரத்தில் இருக்குமா? என்பதைக் காணும் வழி

மகம், பூரம், உத்திரம் ஆகிய இம் மூன்று நக்ஷத்திரங்களில் எது ப்ரசின காலத்து நக்ஷத்ரமானாலும் சமீபத்தில் சமீபத்தில் சொத்து காணப்படும்.

ஹஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், பூராடம ஆகிய இவ்வெட்டு நக்ஷத்திரங்களில் எந்த நக்ஷத்ரமானது ப்ரசின காலத்தில் ஏற்பட்டாலும் அப்போது நஷ்டமான சொத்து தன்னுடைய கிராமத்திலேயே காணப்படும்.

உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதையம் பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, அசுவனி, பரணி ஆகிய இவ்வெட்டு நக்ஷத்திரங்களில் எது ப்ரசினை காலத்தில் ஏற்படினும் நஷ்ட திரவியம் தன்னதலலாத பிற கிராமத்தில காணப்படும்.

மீதமான கிருத்திகை, ரோஹிணி, மிருகசீரிஷம், திருவாதிரை, புனர்ப்பூசம், பூசம், ஆயில்யம். ஆகிய இந்த நக்ஷத்திரங்களில் எது பிரசினை காலத்தில் ஏற்படினும் நஷ்ட சொத்து காணப்படாமலும், தொலை தூரத்திலும் இருக்கும்.

### மேற்படி நஷ்ட சோத்தை களவாடியவர் யார் என்று காணும் விதம்

பிரசினை காலத்தில் மேஷ லக்னம் பிரச்ன லக்னமானல் அப்போது நஷ்ட சொத்தை களவு செய்தவர் பிராமணர் என்றும்,

ரிஷப லக்னம் ப்ரசின லக்னமாக பிரச்ன காலத்தில் ஆனல் சொத்தை அபகரித்தவர் க்ஷத்ரிய ஜாதியார் என்றும்,

மிதுனலக்னம் ப்ரசின காலத்தில் ப்ரசின லக்னம் ஆனல் வைசியர் திருடர் என்றும்,

கடகலக்னம் ப்ரசின காலத்தில் லக்னமானல் சூத்ரர் சோரர் என்றும்,

சிம்ம லக்னம் ப்ரசினை கேட்ட லக்னமானல் சோரர் தன் பந்துக்களே என்றும்,

கன்னியா லக்னம் ப்ரசினை கேட்கும் கால லக்னமானல் அப்போது தஸ்கரர் அங்கனை அதாவது ஸ்திரீயே என்றும்,

துலா லக்னத்தில் நஷ்ட ப்ரசினை நேர்ந்தால் கேட்கப்பட்டால் தன் புத்திரன், தன், தாய், தன் சகோதரர் இவர்களே சோரஞ் செய்தவர் என்றும்,

விருச்சிக லக்னத்தில் நஷ்ட ப்ரசினை நேர்ந்தால் தன்னைச் சாராத அன்னியர் திருட்டைச் செய்தவர் என்றும்,

தனுசு லக்னம் ப்ரசின காலத்தில் லக்னமானல் நஷ்ட மென்ற பொருளுக்கு சொந்த யஜமானனே கள்வன் அதாவது தானே அபகரித்தவர் என்றும்,

மகர லக்னத்தில் நஷ்ட ப்ரசினை ஏற்பட்டால் பெருச் சாளியல் பொருள் நஷ்ட முண்டானதென்றும்,

கும்ப லக்னம் நஷ்டப்ரசினை செய்யப்பட்ட கால லக்கின மாகின சொத்துக் குடையவரின் அம்மானல் சொத்து களவு செய்யப்பட்ட தெனறும்,

மீன லக்னத்தில் ப்ரசினை நஷ்டப் பொருளைப்பற்றி உண் டானல் அந்த நஷ்ட சொத்து பூமியில் மறைந்து போனதென் றும் நஷ்டம் சோரரால் உண்டாக்கப் படாததென்றும் கண்டு கொள்ள வேண்டியது.

கர்ப்ப, துவார, பாஹிய ப்ரசினை

மிதுனம், கன்னி, தனுசு, மீனம் ஆகிய இந்நான்கு ராசி களும் உபய ராசிகள் என்பவை. இவைகளையே இங்கு கர்ப்ப ராசிகள் என்று சமிக்ஞையாக கொள்ள வேண்டும்.

மேஷம், கடகம், துலாம், மகரம் ஆகிய இந்நான்கு ராசி களும், சர ராசிகள் என்று சொல்லப்படுகின்றன. இவைகளை துவார ராசிகள் என்று சமிக்ஞையாக கொள்ளவும்

ரிஷபம், சிம்மம், விருச்சிகம், கும்பம் ஆகிய இந்நான்கு ராசிகளையும் ஸ்திர ராசிக ளெனப்படும். இவைகளை இங்கு பாஹிய ராசிகளென சமிக்ஞையால் கொள்ளவேண்டும்.

இந்த விதிப்படி அதாவது கர்ப்ப, துவார, பாஹிய சமிக்ஞா ராசிகளைக் கொண்டு ப்ரசிணைகளை யோசிக்கும்போது முதலில் சொல்லியிருக்கிற கர்ப்ப ராசிகளில எந்த ராசியில் ப்ரசினை நேர்ந்தாலும் அப்போது பரசினை செய்யப்படுகிற விஷயம் ஜீவ சிந்தையைப் பற்றியதாக ஆகும்.

பாஹிய ராசிக ளென்னப்பட்ட ஸ்திர ராசிகளாகிற ரிஷ பம், சிம்மம், விருச்சிகம், கும்பம் இவைகளில் கேட்கும் பிர சினையானது மூலசிந்தையைப் பற்றியதாக ஆகும்.

இரண்டு, நான்கு, பல கால்களுடைய சம்பந்தமான இரு கால், நாற்கால், பல கால்கள் இவைகளை உடையவை ஜீவ சிந்தையி லடங்கும்.

வெள்ளி, வெண்கலம், சொர்ணம், தகரம், துத்தநாகம், ஈயம், இரும்பு, நவரத்னபேதம் இவைகள் தாது சிந்தையில் அடங்கும்.

வாணிஜ்யம். அதாவது வியாபாரம், யுத்த யாத்திரை, தானியம், விருக்ஷம், வீடு, பாகரு, சந்தம், கர்ப்பூரம், கஸ்தூரி, புது விதைகளை நடல் ஆகிய இவை மூல சிந்தையில் அடங்கும்.

மேஷம், மீனம், தனுசு, இவைகள் நடப்பு ராசிகள், மிதுனம், துலாம், கும்ப மிவைகள் ஆஸீன ராசிகள்.

கடகம், சிம்மம், விருச்சிகம் இவைகள் இருப்பு ராசிகள்,

ரிஷபம், கன்னி, மகர மவ் விராசிகள் சயன ராசிகள், இவைகளில் நடப்பு ராசியில் ப்ரசினையானால் கோர கலஹங்களும், இருப்பு ராசிகளில் உத்தம பலன்களும், சயன ராசிகளில் மரணத்தையும் ஆஸீன ராசிகளில காரியசித்தியும் பலனாகத் தரும்.

நோயாளி சம்பந்தமாக பிரசினை கேட்கையில் கர்ப்பராசிகளில் ப்ரசினை நோந்தால் வியாதி அல்ல என்றும் துவார ராசிகளில் ப்ரச்னம் செய்தால் ரோகமுடைய நோயாளி மிருத்யவை அடைவான் என்றும், பாஹ்ய ராசியில் பிரசினை செய்தால் நோயாளி சுகத்தை அடைவான என்றும் சொல்லவும்.

நஷ்ட ப்ரசனையில் ப்ரச்னம் செய்யும்போது

துவார ராசிகளிலும், கர்ப்ப ராசிகளிலும் ப்ரசினமானுல் நஷ்டமான பொருள் கிடைக்கும்- ஸதிரீயினிடம் அகப்பட்டிருக்கிறது என்று கொள்ளவும்,

பாஹ்ய ராசிகளில் நஷ்ட ப்ரசினை செய்தால் போன பொருள புருஷனுல் அபகரிக்கப்பட்டது. அது திரும்ப கிடைக்காது என்று கொள்ளவும்

கர்ப்ப ராசியில் பிரசினையை கேட்டால் உயரமில்லாத குள்ளமான தாயாதியால் சோரஞ் செய்யப்பட்டது என்றும், பாஹ்ய ராசியில் செய்யப்பட்டால் தாயாதியும கூட சேர்ந்தே களவு செய்யப்பட்டது என்றும், உயரமான நபர் என்றும், துவார ராசியில் ஆனுல் வெளிதேசத்தவர் களவு செய்தவரென்றும, சீக்கிரம் வஸ்து காணப்படும் என்றும் சமஉயரமுடைய நபர் என்று கொள்ளவும்.

மேஷம், ஸிம்மம், தனுஸு இவைகளில் ப்ரசினம் நேர்ந்தால் காலதாமதத்தில் காரியஸித்தி யுண்டாகும்.

கடகம், மகரம், விருச்சிகம் இவைகளில் ப்ரசினஞ் செய்யப்பட்டால் காரிய நாசமே ஆகும்.

ரிஷபம், துலாம், கும்பம் இவற்றில் பிரசினஞ் செய்யப்பட்டால் வெகு தனலாபமும், ப்ரசின பலனுக உண்டாகும்.

மிதுனம், கன்னி, மீனம் இந்த ராசிகளில் ப்ரசினஞ் செய்யப்பட்டால் வெகு தனலாப மும், ப்ரசின பலனுக உண்டாகும்.

ப்ரசினைகளின் பெயர் எட்டுவிதம்

| | |
|---|---|
| (1) ஸம்யுக்தம் | (5) அபிகாதிகம் |
| (2) அஸமயுக்தம் | (6) ஆலிங்கிதம் |
| (3) அபிஹிதம் | (7) அபிதூமிதம் |
| (4) அநபிஹிதம் | (8) தக்தம் என ஆக |

எட்டு விதமான பெயர்கள் சொல்லப்பட டிருக்கிறது. ஆக எட்டு விதங்களிலும், பிரச்னையைக் கேட்கும்போது கேட்பவர் பக்தி சிரததையுடன் தன் கையினுல் வேறு எதையும் தொடாமலும், ஒருவிதமான சேஷ்டைகளும் செய்யாமல் இருந்து கேட்கும் பிரசினைக்கு ஸம்யுக்தம் என்று பெயர். இப்படிக் கேட்கும் ப்ரசினை மிக்க உத்தமமான பலனைத் தரும். லாப மும் உணடாகும்.

ப்ரசினையைக் கேட்கும்போது, மார்க்கங்களில் இருந்து கொண்டும், படுத்துக்கொண்டும், வாகனங்களின பேரில் இருந்துகொண்டும், சரியான எண்ணமின்றியும, பழம், தாம்பூலம தக்ஷிணை இவையின்றியும் கேட்கும் ப்ரசினைககு அஸம்யுக்தம் என்ற பெயர். இதற்கு பலன் வெகு நாட்களுக்குப் பிறகே பிரசினை கேட்ட பலன் ஸித்திக்கும்.

ப்ரசினையைக் கேட்கும்போது மங்களகரமானவைகளை வைத்துக்கொண்டு அல்லது எடுத்துக்கொண்டு அல்லது தொட்டுக்கொணடு கேட்கும பிரசினையை அபிஹிதம் என்று சொல்லப்படும். இதன் பலன் நல்ல லாபகரமாக ஸித்தியாதும்.

ப்ரசினையைக் கேட்கும்போது தன் கையினுல பிறருடைய சரீரததைத் தொட்டுக்கொண்டே கேட்டால் அது அநபிஹிதம் எனறு சொல்லப்பட்ட பிரசினையாகும். இதனுல் ஒரு பலனும் கிட்டாது; தவிர நஷ்டமும் ஏறபடும.

ப்ரசினையைக் கேட்கும்போது தன் சகாயத்தினால் இதரருக்காகத் தான் கேட்டாலும் கேட்கும்போது தலையைத் தடவிக்கொண்டே கேட்டாலும் அல்லது இதயம் இவற்றில் கைகளால் அடித்துக்கொண்டே கேட்டாலும், கைகளால் கால்களை தடவிக்கொண்டோ, அடித்துக்கொண்டோ கேட்டாலும் கைகளைப் பிசைந்துகொண்டோ அல்லது கைகால்களை உதைத்துக்கொண்டோ ப்ரசினையைக் கேட்டாலும் அந்த ப்ரசினைக்கு அபிகாதிகம் என்று பெயர். இதற்குப் பலன் சோகமும், பாதகமும்தான் ஏற்படும்.

ப்ரசினையைக் கேட்கும்போது கேட்பவர் தன்னுடைய வலது கையினால் தன் சரீரத்தைத் தொட்டுக்கொண்டால் அந்த ப்ரசினைக்கு ஆலிங்கிதமென்று பெயர். அதற்குப்பலன் சுகமும் சற்று துக்கமும் உண்டாகும்; துக்கத்திற்கு சிலர் வியாகூலமென்று கூறுகின்றனர்.

ப்ரசினையைக் கேட்பவர் கேட்கும்போது தன்னுடைய இரண்டு கைகளாலும் தன்னுடைய ஸர்வ அங்கங்களையும் தொட்டுக்கொண்டே கேட்டால் அந்த ப்ரசினை அபிதூமிதம என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்குப் பலன் அற்பலாபமும் மித்திரரின் வரவும் மித்திரர் வருவர் என்கிற சமசையும் மித்திரராலேயே கொடுபடும் பலனுமாகும்,

பரசினையைக் கேட்பவர் கேட்கும்போது அழுதுக் கொண்டும் அலக்ஷியமாகவும், ஜலத்தில் இருக்கும்போதும், தகாத இடத்தில் இருக்கும்போதும், தகாத செய்கையுடனும் பக்ஷஹீனமாகவு மிருந்துகொண்டும், அலைந்துகொண்டும், நல்ல எண்ணமின்றியும, போர் செய்துகொண்டும் துன்பப் பட்டுக்கொண்டும கேட்கும் ப்ரசினைக்கு தக்தம் என்று சொல்லப்பட்டிருககின்றது, இதற்குப் பலன் நிஷ்பலன்தான். என்றும் ஒன்றும் ஏறபடாது.

ப்ரசினை கேட்கத் தகாதவர்கள்

குள்ளர்கள், அங்க ஹீனர், காக்கையைப் போன்ற குணம், பரபரப்பு, குரூரத்தன்மை, பேராசை படைத்தவர், திருப்தியற்றவர், குஷ்டரோகி, விபசாரியின் பிள்ளை, ஆத்திரம் கொண்

டவர், குருடர்கள், வஞ்சகர், *கோளகர், லோபி, செவிடர் இவர்கள் கேட்டால் இவர்களுக்கு பலன் சொல்லவும் கூடாது இவர்கள் கேட்கவும் தகாதவர்கள். கேட்பதற்கு சமாதான மாக இக்கலியுகத்தில் எதையும் இவர்களுக்கு சமாதானம் சொல்லிவிட வேண்டியது. மேலும், அனர்த்தகாரருக்கும், விசுவாச மற்றவர்கட்கும் பெரிய சந்தேகக்காரருக்கும், பரிகா சக்காரருக்கும் ப்ரசினோத்தரமே சொல்லக் கூடாதெனபது பொருள்.

ப்ரசினை கேட்பவர் எதைப்பற்றி கேட்கிறார் என்பதை
சாமான்னய சிந்தையாய் அறிய

மேஷராசி பிரச்ன ராசியானல் இருகால் உள்ளவைகளைப் பற்றியதும, ரிஷப ராசி ப்ரசினை ராசியானல் நாற்கால் ஜந்துக் களைப்பற்றிய சிந்தையும், மிதுனம் (இரட்டைப்பட்ட) ராசி யாகிறபடியால் இதில் கேட்கும பிரச்னையில் கர்ப்பிணியைப் பற்றிய சிந்தையும, கடகராசியில் பிரசினையானல் வியாபாரம், விவஹாரம இவற்றைப்பற்றிய சிந்தையும், சிம்மராசி ப்ரசின ராசியானல் அரசாங்கத்திலுள்ள ப்ரசினையும், கன்னியாராசி யானல் விவாஹ சம்பந்தமான ப்ரசினையும், துலாராசி ப்ரசனை ராசி ஆனல் தாது ஸம்பந்தமான சிந்தையும், விருச்சிகராசியில் ப்ரச்னம செய்தால் ரோக சிந்தையும், தனுசுராசி ப்ரசின ராசி ஆனல தனலாபத்தைப்பற்றிய சிந்தையும, மகரராசி ப்ரசின ராசி ஆனல் சத்ருவின கலஹ சம்பந்தமான ப்ரசினையும், கும்ப ராசி ப்ரசின ராசி ஆனல் ரகசியமான தனத்தைப்பற்றிய சிந்தையையும், மீனராசி ப்ரசின ராசி ஆனல் ஸதானத்தின் அசைவும் சொலலப்பட்டிருக்கிறது. இதற்கே வேறு பக்ஷத்தில் ப்ரசனராசியானது மேஷமானல், ஸ்வர்ண சம்பந்த ப்ரசினை யென்றும், ரிஷப ராசி ப்ரசின ராசி ஆனல் வெள்ளி சமபந்த ப்ரசினை என்றும், ப்ரசின ராசி மிதுன ராசி ஆனல் தாமிரம் (அதாவது செம்பு) சம்பந்தமான ப்ரசினையென்றும், கடகராசி ஆனல், வெண்கல சமபந்தமான ப்ரசினை என்றும, சிம்மராசி ப்ரசின ராசி ஆனல் இருப்பு சம்பந்தமான ப்ரசினை யென்றும் கன்னியாராசி ப்ரசினராசி ஆனல வஸ்திர ஸம்பந்தமுள்ள

* கணவனிறந்து விதவையான பின்பு ரகசியத்தில் கருப்பந்தரித்து பிறந்தவர் என்பது பொருள்.

ப்ரசினையென்றும், துலாராசி ப்ரசின ராசி ஆனுல் பருத்தி ஸம்பந்தமான ப்ரசினை என்றும், விருச்சிகராசி ப்ரசின ராசி ஆனுல் தான்னிய சம்பந்தமுற்ற ப்ரசினை யென்றும், தனுசு ராசி ப்ரசின ராசி ஆனுல் தன சம்பந்தமான ப்ரசினையென்றும், மகரராசி ப்ரசினை ராசி ஆனுல் நீரில் சஞ்சரிப்பதை ஒட்டிய ப்ரசினை யென்றும், கும்பராசி ப்ரசின ராசி ஆனுல் ஸுக்ர சம்பந்தமான ப்ரசினை யென்றும், மீனராசி ப்ரசினராசி ஆனுல் நஷ்டதிரவிய ப்ரசினை யென்றும் சிந்திக்கவும்.

ப்ரசினையில் காலநிர்ணம் கூறுகிறுர்

ஆலிங்கிதம் என்னப்பட்ட ப்ரசினையில் அன்றைய தினத்திலேயே பலனுண்டாகும், அபிதூமிதம் என்கிற ப்ரசினையில் பத்து தினததில் பலனுண்டாகும. வேறு பக்ஷம் ஒரு மாதத்தில் அதாவது பிரச்னையைக் கேட்டநாள் முதறகொண்டு ஒரு மாதத்தில் மேற்படி பிரசினைக்குரிய பலனுண்டாகும் என்றுளது. தத்தம் எனகிற ப்ரசினையில் ஒரு வருஷத்தில் பலனுணடாகும். வேறுபக்ஷம் பதினைந்து நாட்களில ப்ரசினையால் கேட்ட பலன் ஸித்திக்கு மெனகிறதாக சொலலப்பட்டிருக்கிறது.

தாம்பூலத்தில் அதாவது வெற்றிலையினுல் மாத்திரம் பிரச்னையின் பலனை அறிய

ப்ரச்னை கேட்க வருங் காலததில் ப்ரச்னை கேட்பவரால் தைவக்ஞனிடம் கொண்டுவரப்படுகிற வெற்றிலை, பாக்கு, பழம் தக்ஷிணை இவைகளில் ஒவ்வொன்றையும் தனித் தனியாக எணணி வைத்துக்கொண்டு அவற்றில் வெற்றிலையைமட்டும் தனியாக எண்ணி அதன் எண்ணிக்கையை இரண்டு மடங்காக செய்துகொண்டு மேற்படி எண்ணிக்கையில் வந்த தொகையை பன்னிரெண்டினுல் வகுதது மீதி எண்ணுல் மேஷாதிராசி கிரமமாக கண்டு அதன் பலனைச் சொல்லவும்.

அதாவது மனதில் உள்ளவற்றை அறியும் வழியில் சொல்லி யுள்ளபடி அறிந்து அதற் கனுகுணமாக பலனைச் சொல்லவும்.

வெற்றிலைபாக்கு இவற்றுல் ப்ரசினைப் பலனைக் காண

மேலே சொல்லியபடி ப்ரச்னை கேட்க வருங் காலத்தில் ப்ரசினை கேட்க வருபவரால கொண்டுவரப்படுகிற வெற்றிலை

பாக்கை எண்ணி அவற்றின் எண்ணிக்கைகளை மூன்றினால் பெருக்கி வைத்துக்கொண்டு ஆறினால் வகுத்து வரும் மீத முள்ள எண்ணுக்குரிய பலனை கிரமப்படி தெரிந்து சொல்ல வேண்டியது. மேலே சொல்லி யுள்ளபடி வகுத்து வரும் மிச்சம் ஒன்று ஆனால் கேட்கப்பட்ட ப்ரசினையில் பலன் லாபமுண்டாகும் என்றும், இரண்டு மிச்சமானால் கேட்கப் பட்ட ப்ரசினைக்குரிய பலனில ஹானி யுண்டாகுமென்றும், மேற்படி மிச்ச எண் மூன்று ஆக வந்தால் பிரசினை பலன சுக முண்டாகும் என்றும், நானகு மிச்சப்படின ப்ரசினையின் பலன துக்ககரமாகும் என்றும், ஐந்தாக மீதம் வரின், ப்ரசினை கேட் பதற்கு ஜீவனுண்டு என்றும், ஆறு மீதமாக வரின் கேட்கப் பட்ட பிரசினைக்குப்பலன் மரணமுண்டாகுமென்றும் தெரிந்து சொல்ல வேண்டியது.

நவக்கிரகங்களினால் ப்ரசின பலனைக் காணவேண்டு மென்கிறார்.

ப்ரசினை கேட்க வருபவர் கொண்டுவரும் தக்ஷிணையினால் ப்ரச்னையின் பலனைக் காண

ப்ரச்னை கேட்க வருபவரால் முதலில் ஜோதிஷருக்கு ஸமர்ப்பிக்கப்படுகிற தக்ஷிணையில் இருக்கிற பொன், வெள்ளி, தாமிரம் ஆகிய நாணயம் ஒவ்வொன்றையும் தனித்தனியாக எண்ணிக்கொணடு அவை ஒவ்வொன்றின் தொகையையும் இரண்டினால் பெருக்கிக்கொண்டு அதைதொகைகளை ஒன்பதால் வகுத்து மீதி ஏற்படுகிறதைக்கொண்டு வரிசைக் கிரமமாக கிரகங்களை அறிந்து அவர்களால் பலனை அறியவும்.

மேற் சொல்லியபடி வகுத்த மிச்ச எண்

| | | | |
|---|---|---|---|
| ஒன்றாகவரின் | ஸூரியன் | ஆறாகவரின் | சுக்கிரன் |
| இரண்டாகவரின் | சந்திரன் | ஏழாகவரின் | சனி |
| மூன்றானால் | அங்காரகன் | எட்டாகவரின் | ராகு |
| நான்காகில் | புதன் | ஒன்பதாகவரின் | கேது |
| ஐந்தாகில் | குரு | | எனக் கண்டு, |

ஆதித்யாதி இந்த நவக்கிரகங்களையும், கிரந்தகர்த்தர்களை யும், பெரியோர்களையும், தன் குல தேவதையையும், இஷ்ட தெய்வத்தையும் ஆசாரியனையும் நன்கு பூஜித்து தைவக்ஞர் பலனைச் சொல்லவேண்டியதுதான் கடமையாகும.

---

# கார்க்கிய பஞ்சபக்ஷி சாஸ்திரம்

## ஆரூட பாகம்

---

ப்ரசினைக்கும் உபயோக மாகும்

**பஞ்சபக்ஷிகளுக் குரிய லக்கினங்கள்**

மயிலுக்கு—கடகம்-மகரம்-கும்பம-லககினங்கள்
கோழிக்கு—மேஷம் சிம்மம்-விருச்சிகம்-லக்னங்கள்
காகத்திற்கு—மிதுனம்-கன்னி-லக்னங்கள்
ஆந்தைககு—மீனம்-தனசு-லக்னங்கள்
வல்லூறுககு—ரிஷபம்-துலாம-லக்னங்கள்

அக்ஷரங்களுக் குரிய பக்ஷிகள்

**தேக பக்ஷிகள்**

| | | | |
|---|---|---|---|
| அ. | வல்லூறு, | கழுத்துக்கு மேல், சிரசு, | |
| இ. | ஆந்தை | கைகளிரண்டும், புஜங்கள். | |
| உ. | காகம் | (முழு உடல் முன) | வக்ஷம். (மார்பு) |
| எ. | கோழி | ,, ,, | வயிறு, (பின் உடல்) |
| ஒ. | மயில் | ,, ,, | தொடைகள், கால்கள் இரண்டும், |

பஞ்சபூதங்களை அறிய

| | | | | | நஷ்ட இருப்பு |
|---|---|---|---|---|---|
| அ. | பிருதிவீ | அதாவது | பூமி | .... | ஆதிபூதேஷு, |
| இ. | அப்பு | ,, | ஜலம் | .... | ஜலத்தில், |
| உ. | தேயு | ,, | நெருப்பு | .... | மனிதன் கையில், |
| எ. | வாயு | ,, | காற்று | .... | வீட்டின் உள்ளே, |
| ஒ. | ஆகாசம் | ,, | ஆகாயம் | .... | ஊர்த்துவ பாகத்தில் காணப்படும், |

பஞ்ச தொழில் காலம். நாழிகை ஆறுக்கும் விவரம்

| | | |
|---|---|---|
| போஜனம் | முகூர்த்தம். | ஒன்றரை நாழிகை |
| கமனம் (நடை) | ,, | ஒன்றேகால் நாழிகை |
| ராஜ்யம் (அரசு) | ,, | இரண்டு நாழிகை |

சித்திரை ,, முக்கால் நாழிகை
மரணம ,, அரைநாழிகை இப்படி ஆக நாழிகை ஆறுக்கும் விபரம்.

பலன்கள் தொழில் காலத்தில் கொடுப்பதைக் காணும் வழி

தன்னுடைய பக்ஷி போஜனத்தில் இருந்தால் ஜயத்தையும்,
தன்னுடைய பக்ஷி மரணத்தில் இருந்தால் காரிய ஹானியையும்,
தன்னுடைய பக்ஷி நித்திரையில் இருந்தால் பங்கத்தையும்,
தன்னுடைய பக்ஷி ராஜ்யத்தில் (அரசில்) இருந்தால் ஜயத்தையும்,
தன்னுடைய பக்ஷி நடையில் இருந்தால் காரிய ஹானியையும் தரும்.

பக்ஷ நக்ஷத்திர பக்ஷிகள்

சுக்ல பக்ஷத்தில். அதாவது வளர் பிறையில்

வல்லூறுக்கு—அசுவனி-பரணி-கிருத்திகை-ரோகினி - மிருகசீரிஷம்-ஆக ஐந்தும்,
ஆந்தைக்கு— திருவாதிரை - புனர்பூசம்-பூசம்- ஆயில்யம்-மகம்-பூரம்-ஆக ஆறும்,
காகத்திற்கு—உத்திரம் - ஹஸ்தம்-சித்திரை-ஸ்வாதி-விசாகம்—ஆக ஐந்தும்,
கோழிக்கு—அனுஷம்-கேட்டை-மூலம்-பூராடம்—உத்திராடம்-ஆக ஐந்தும்,
மயிலுக்கு—திருவோணம்— அவிட்டம்—சதையம்-பூரட்டாதி-உத்திரட்டாதி-ரேவதி ஆக ஆறும் ஆக மொத்த இருபத்தேழு நக்ஷத்திரங்களும்,

கிருஷ்ண பக்ஷத்தில் அதாவது தேய் பிறையில்

கோழிக்கு—அவிட்டம்-சதையம் - பூரட்டாதி-உத்திரட்டாதி-ரேவதி ஆகிய ஐந்து நக்ஷத்ரங்களும்,
மயிலுக்கு—அசுவனி-பரணி - கிருத்திகை - ரோகிணி-மிருகசீரிஷம்-திருவாதிரை-புனர்ப்பூசம் ஆக ஏழு நக்ஷத்திரங்களும,
ஆந்தைக்கு— உத்திரம-ஹஸ்தம்-சித்திரை—ஸ்வாதி—விசாகம்—அனுஷம் ஆகிய ஆறு நக்ஷத்ரங்களும்,

வல்லூருக்கு—கேட்டை - மூலம் - பூராடம் - உத்திராடம் - திருஓணம் ஆகிய ஐந்து நக்ஷத்திரங்களும் ஆக மொத்த இருபத்தேழு நக்ஷத்திரங்களும் பக்ஷி நக்ஷத்திரங்களாக ஆகும்.

அக்ஷர ராசிகள்

| அக்ஷரம். | = | பக்ஷிகள். ராசிகள். |
|---|---|---|
| அ. | = | வல்லூறுக்கு-மேஷம்-சிம்மம்-விருச்சிகமும், |
| இ. | = | ஆந்தைக்கு-கன்னி-மிதுனம்-கடகமும், |
| உ. | = | காகத்திற்கு-தனுசும்-மீனமும், |
| எ. | = | கோழிக்கு-துலாமும்-ரிஷபமும், |
| ஒ. | = | மயிலுக்கு-மகரமும்-கும்பமும் அக்ஷர ராசிகள் எனப்படும். |

பக்ஷிகளுள், பக்ஷி சத்துரு மித்ரத்துவம் அறிய

மயிலும் - வல்லூறும் - மித்திரம், காகமும் - கோழியும் சத்துரு.

மயிலும்-ஆந்தையும்-மித்திரம்,

ஆந்தையும்-வல்லூறும்-மித்திரம், ஆந்தைக்கு காகமும், கோழியும் எக்காலமும் சத்துரு.

காகத்திற்கு எப்போதும் வல்லூறு - ஆந்தை - கோழி இவை சத்துரு.

கோழிக்கு எக்காலத்தும் காகமும்-வல்லூறும் சத்துரு.

மயிலுக்கு எப்போதும் ஆந்தையும்-கோழியும் சத்துரு.

ஒன்றுக் கொன்று பக்ஷிகளில் வலுவுள்ள பக்ஷிகளை அறிய

மயிலுக்கும்-ஆந்தைக்கும் கோழி பலிஷ்டன்,

மயில்-ஆந்தை-கோழி இம்மூன்றுக்கும் வல்லூறு பலவான்.

மயில்-ஆந்தை-கோழி-வல்லூறு ஆகிய நான்கு பக்ஷிகளையும் விட காகம் பலிஷ்டன்

எல்லா பக்ஷிகளுக்கும் காகமே மேலான பலிஷ்டன் பூர்ண பல முடையது.

காகத்தைவிட வல்லூறு துர்ப்பலனுடையது, $\frac{3}{4}$ பங்கு பலமுடையது.

வல்லூறைவிட கோழி துர்ப்பலனுடையது. $\frac{1}{2}$ பங்கு பலமுடையது.

கோழியைவிட ஆந்தை துர்ப்பலனுடையது. ½ பங்கு பலமுடையது.

ஆந்தையைவிட மயில் துர்ப்பலனுடையது. ⅛ பங்கு வலுவுள்ளது.

திக்குப் பக்ஷிகளை அறிய

வல்லூறுக்கு வடகிழக்கும் கிழக்கும்,
ஆந்தைக்கு தெற்கும் தென் மேற்கும்,
காகத்திற்கு மேற்கும் தென்கிழக்கும்,
கோழிக்கு வடமேற்கும் தென்கிழக்கும்,
மயிலுக்கு ஆகாசமும் பூதலமும் திக்குகளாக சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளில் திக்கு பக்ஷி காரியரூபியாகவும் ப்ரசின பக்ஷி பல தாதாவாகவும் ஆகும்.

பகல் தின ராத்திரி பக்ஷி

| வளர் பிறையில் | | பகல் | | இரவு தொழில்களை காண |
|---|---|---|---|---|
| அ. | வல்லூறு | போஜனம் | = | போஜனம் |
| இ. | ஆந்தை | நடை | = | ராஜ்யம் |
| உ. | காகம் | ராஜ்யம் | = | மரணம் |
| எ. | கோழி | நித்திரை | = | நடை |
| ஒ. | மயில் | மரணம் | = | நித்திரை இப்படி |

நடத்தும்.

தேய் பிறையில்

| பகல். | இரவு. |
|---|---|
| போஜனம் | போஜனம் |
| மரணம் | நித்திரை |
| நித்திரை | நடை |
| ராஜ்யம் | மரணம் |
| நடை | அரசு |

அக்ஷரத்தைக் கொண்டு திசைகளை அறியும்படி

| அக்ஷரம். | திக்கு |
|---|---|
| அ. | கிழக்கு |
| இ. | கிழக்கு |
| உ. | மேற்கு |
| எ. | வடக்கு |
| ஒ. | நாலு திக்கும் |

| இவற்றில் நாள்கள் | | | சுக்ல பக்ஷம் பகல் | | இரவு | கிருஷ்ண பக்ஷம் பகல் | | இரவு |
|---|---|---|---|---|---|---|---|---|
| போஜனத்தில் | 5 | நாள் | 1 | = | 5 | 1 | = | 2 |
| நடையில் | 4 | ,, | 2 | = | 4 | 5 | = | 3 |
| அரசியலில் | 3 | ,, | 3 | = | 3 | 4 | = | 4 |
| நித்திரையில் | 2 | ,, | 4 | = | 2 | 3 | = | 5 |
| மரணத்தில் | 1 | ,, | 5 | = | 1 | 2 | = | 1 |

ஆக 15 நாட்களும் பக்ஷம்.

காலம்

சந்திரன் பக்ஷம் வர்த்தமானம்

செவ்வாய் 1 மாதம் பவிஷ்யத் காலம் 1 அதாவது எதிர் காலம்.

குரு-புதன்-சுக்ரன் 6 மாதம் வர்த்தமானம்

சனி ஒரு வருஷம் பூதகாலம், அதாவது நடந்த காலம்.

இப்படி அறிவதில் சகல பலனையும் அவரவர் தத்தம் வேலை சகலத்திலும் அறிந்து செய்வதுதான சாலச் சிறந்ததாகும். இப்படியே பிரசினை விஷய்த்திலும் உபயோகிக்கலாம்.

பக்ஷிகளில் ஆண் பெண், ஜாதி இவைகளை அறிய

| பக்ஷி. | ஆண். பெண். ஜாதி. | | ஸ்தலம் |
|---|---|---|---|
| வல்லூறு | ஆண | பிராமண ஜாதி. | |
| ஆந்தை | பெண் | வணிக ஜாதி. | |
| காகம் | | உலகத்திற்கு அரசு க்ஷத்ரிய ஜாதி | =நீர்க்கரையில் |
| கோழி | | வேளாள ஜாதி | =பூமியில் |
| மயில் | | சண்டாள ஜாதி | =தன் மனையில் |

மனிதனின் கை விரல்களில் பக்ஷிகளை காண

| | | |
|---|---|---|
| முட்டி விரல் | வல்லூறு | கட்டை விரல் |
| முனிந்த விரல் | ஆந்தை | ஆள் காட்டி விரல் |
| நெட்டை விரல் | காகம் | நடு விரல் |
| அணி விரல் | கோழி | மோதிர விரல் (அணி விரல்) |
| சிறு விரல் | மயிம் | சுண்டு விரல் கடைசி விரல். |

பக்ஷிகளால் வர்ண மறிய

வளர் பிறையில்

| | | |
|---|---|---|
| வல்லூறு | வெளுப்பு நிறம் | பொன் |
| ஆந்தை | பொன்னிறம் | வெள்ளி |
| காகம் | சிவப்பு நிறம் | சிவப்பு பலவும் |
| கோழி | பச்சை நிறம் | வெள்ளை பலவும் ஈயம் |
| மயில் | கருப்பு நிறம் | இரும்பு |

**நஷ்ட வஸ்துவின் நிறம் தேய் பிறையில்**

| | |
|---|---|
| ஆந்தை | சிவப்பு நிறம் |
| காகம் | பொன் நிறம் |
| மயில் | பச்சை நிறம் |
| கோழி | வெள்ளை நிறம் |
| வல்லூறு | கறுப்பு நிறம் |

**பக்ஷிகளால் சிந்தையை அறிய**

சாக்கையும் வல்லூறும் ஜீவன்
ஆந்தையும் மயிலும் தாது
கோழி மூலம்

தாதுவில், வீடு, மரம், செடி, கொடி முதலியனவும்.

மூலததில் பொன் பொருள் உயிரற்றவையும் அடங்கும்

அக்ஷரம் இருவருக்கு(ம்) ஒன்ருனல்

| | |
|---|---|
| போஜனத்தில் | மூப்புடையவனும் |
| நடையில் | வாலிபனும் |
| அரசியலில் | இளையவனும் |
| தூக்கத்தில் | அதிகப் பலிஷ்டனும் |
| சாவில் | அதிகப் பெயடையவரும் |

ஜயத்தை அடைவார்கள்.

**படு பக்ஷிகள் வளர் பிறையில்**

| | | | |
|---|---|---|---|
| ஞாயிறு | வெள்ளி | இவற்றில் | ஆந்தையும் |
| வியாழன் | சனியில் | ,, | வல்லூறும் |

செவ்வாயில் கோழியும்
புதனில் மயிலும் படுபக்ஷிகள்

குறிப்பு:—தங்களுடைய வாரத்தில் தொழில் ஏதும் செய்யக்கூடாது.

**தேய் பிறையில்**

திங்களில் ஆந்தையும் செவ்வாயில் வல்லூறும்
வெள்ளி புதனில் மயிலும், சனி வியாழனில் கோழியும்,
ஞாயிற்றில் காகமும் படு பக்ஷிகளாகும்.

பலன்

தன் பக்ஷி நடையில் இருக்கையில் எது செய்தாலும் மத்திமமாகும்.

நித்திரை மரண மிவற்றில் இருக்கையில் எது செய்தாலும் ஆகாது.

தன் பக்ஷி அரசு செய்கையில் எது செய்தாலும் உத்தமமான பலன் உண்டாகும். முற்றும்.

சுபமஸ்து.

---